# புரட்சித்தலைவருக்கு உற்சாக வழியனுப்பு

Regd. No. TN-MS (C) 244 Phone : 420212 4 பக்கம் விலை 50 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 9] சென்னை 26-7-1985 வெள்ளி வெளியூர் 27-7-1985 சனி [இதழ் 274

## சென்னை விமான நிலையத்தில் கோலாகலம்

**சென்னை, ஜூலை 26- தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் காலை ஆறு மணிக்கு ஜப்பானுக்கு செல்லும் வழியில் புதுடெல்லிக்கு விமானம் மூலம் புறப்பட்டுச் சென்றார்.**

விமான நிலையத்தில் அவருக்கு மகத்தான வழி அனுப்பு விழாவைபவம் நடந்தது மலைமலையாகமாலைகளும், கைத்தறி கதராடைகளும் குவிந்தன.

தமிழக அரசின் பூம புகார் கப்பல்போக்குவரத்திற்குக் கப்பல் வாங்குவதறகாக முதல்வா புரட்சித்தலைவர் ஜப்பான் செல்கிறாா

ஜப்பான் செல்லும் வழியில் அவர் காலை ஆறு மணிக்கு விமானம் மூலம டெல்லிக்கு பயணமானார்

புரட்சித்தலைவருடன் அவருடைய துணைவியார் ஜானகிஅம்மையார், மின்சாரத்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், அவருடைய துணைவியாா சாந்தி ராமச்சந்திரன், போக்குவரத்துத்துறைஅமைச்சர் முத்துசாமி, அவருடைய துணைவியார் ஜெயலட்சுமி முத்துசாமி, புரட்சிததலைவரின் உதவிச் செயலாளர் பிச்சாண்டி, பூமபுகார கபபல் போக்குவரத்துக் கழகத் தலைவர் வெங்கட சுப்பிரமணியம், புரட்சித் தலைவரின் தனி மருத்துவா டாக்டர் பி ஆர் சுப்பிரமணியம், டாக்டர் நரேந்திரன், புரட்சித்தலைவரின் மெய்க்காப்பாளர்களான ஆறுமுகம், கணணுசாமி உதவியாளர் மாணிக்கம் ஆகியோரும் விமானத்தில் பயணமானார்கள்.

### மக்கள் வெள்ளம்

புரட்சிததலைவரை வழி அனுப்பி வைக்க மீனமபாககம் விமான நிலையததிறகுச் பொது மக்களும், கழகத்தோழாகளும வெள்ளம்போல் திரண்டு வந்து இருந்தனர்.

வானம்மப்பும்மந்தாரமுமாக இருந்த போதிலும் அவ்வப்போது மழை தூரல்போட்டு கொண்டிருந்தபோதிலும் காலை ஐந்து மணிக்கெல்லாம விமான நிலைய முகப்பிலும் வழிநெடுகிலும் ஆயிரமாயிரமாக மக்கள் திரண்டுவிட்டனர்

ராமாவரம் தோட்டத்திலிருந்து தமது துணைவியார் ஜானகி அம்மையாருடன்புரட்சித தலைவர் காலை 5.30 மணிக்கு விமான நிலையம் வந்து சோந்தாா.

புறப்படுவதற்கு முன்னர் அன்னை சத்தியா அவர்களின் திருவுருவப் படத்திற்கு மாலைஅணிவித்து அன்னையின் ஆசியினைப் பெற்றார்

புரட்சித்தலைவர் வந்தபோது சத்துணவு தந்த சரித்திர நாயகனே வாழ்க, புரட்சிததலைவர் வாழ்க, பொன்மனச் செம்மல் வாழ்க என்பன போன்ற வாழ்த்து முழக்கங்களை வழி நெடுக மககள் விண்ணதிர முழக்கினர்

வழிநெடுக மக்கள் தந்த இந்த மகத்தான வரவேற்பை புரட்சித் தலைவர்இரு கரம கூப்பி ஏற்றுக்கொண்டாா.

விமானக்கூட வாயிலில் அரசு தலைமைச் செயலாளர் அந்தோணி பரட்சித்தலைவரை வரவேற்று அழைத்துச் சென்றார்

மீனம்பாக்கம சர்வதேச விமான நிலையததில் புரட்சித தலைவரை வழி அனுப்ப வந்த அமைசசா பெருமக்கள் பிரமுகர்கள் தங்குவதறகு சிவப்புக் கம்பளம் விரித்த தனி அலங்கார பந்தல் போடப்பட்டு இருந்தது

### மலைபோல் மாலைகள்

விமானக் கூட வாயிலில் சத்துணவுக் கூட இரு சிறுவாகளும், இரு சிறுமிகளும் புரட்சித் தலைவருக்கு மலர் மாலைகள் அணிவித்தனர். அந்தக் குழந்தைகளை புரட்சித தலைவர் தட்டிக் கொடுத்து அன்பைப் பொழிந்தார்.

அமைச்சர் பெருமக்கள், வாரியத் தலைவாகள், சட்டமறை மேலவை உறுப்பினர்கள் பாராளுமன்ற உறுப்பினர்கள், மாவட்டச் செயலாளர்கள், மாவட்ட எம்.ஜி.ஆர்.மன்றச்செயலாளர்கள், இளைஞர் அணி, மகளிர் அணி, தொழிற் சங்கச் செயலாளர்கள் ஆகியோர் புரட்சித் தலைவருக்கு ஆள் உயர மலர் மாலைகளும், கைத்தறி கதராடைகளும் அணிவித்தனர்

தமிழக கவர்னர் குரானா சார்பில் புரட்சித் தலைவருக்கு மலர்ச்செண்டு அளிக்கப்பட்டது

புரட்சித் தலைவரின் வெளிநாட்டுப் பயணம் வெற்றி பெற இறைவனைப் பிரார்த்திக்கிறேன் என்று கூறி மேலவைத்தலைவர் ம.பொ.சி. மாலை அணிவித்தார்.

சட்டமன்ற சபாநாயகர் பி எச் பாண்டியன், துணைத்தலைவர் வி பி பாலசுப்பிரமணியம் ஆகியோர் மாலைகள் அணிவித்தனர்

### பொதுச்செயலாளர்

அனைத்திந்திய அண்ணா திமு கழகத்தின சார்பாக பொதுச் செயலாளர் இராகவானந்தம் தலைமையில் கழகத்தின் அனைத்து நிர்வாகிகளும், புதுவை மாநிலத்தின் சார்பில் மாநில கழகச் செயலாளர் பி. கே. லோகநாதனும் மாலைகள் அணிவித்தனர்

மேலவைத் துணைத் தலைவா சாமிநாதன், கொறடா ஜேப்பியார், ஆகியோரும புரட்சித் தலைவருககு மாலைகள் அணிவித்தனர்,

புரட்சித் தலைவரை வழி அனுப்பி வைக்க முசிறிப்புததன் சக்கர நாற்காலியில் வந்திருந்தார் புரட்சித்தலைவருக்கு மாலைஅணிவிக்க அவர்எழுந்திருக்கமுயன்றாா. எழுந்திருக்க வேணடாம் என்றுகூறிபுரட்சித் தலைவர் அவருடைய மாலையைப் பெற்றுக் கொண்டார்.

### காங்கிரஸ்

தமிழ்நாடு காங்கிரஸ் கட்சிததலைவர் பழனியாண்டி, டி பி ஏழுமலை எஸ். கே டி. ராமச்சந்திரன் ஏ.ஜே தாஸ் ஆகியோர் புரட்சித் தலைவருக்கு மாலைகள் அணிவித்து வெளிநாட்டுப்பயணம் வெறறி பெறவேணடும் என்று நல்வாழததுக கூறினா.

மக்களின் மகத்தான அன்பைப் பெறறுக் கொண்ட புரடசித தலைவர் அங்கிருந்து உள்நாட்டுபயண விமான நிலையத்திற்குச் சென்று டெல்லிக்குப் பயணமானார்.



முதல்வர் புரட்சித் தலைவர் வெளிநாடு செல்ல சென்னை விமான நிலையம் வந்து சேர்ந்தபோது எடுதத படம். முதல்வரின் துணைவியாா ஜானகி அம்மையார். நிதி அமைச்சா டாக்டர் நாவலர், அமைச்சர் பண்ருட்டி ராமச்சநதிரன், அரசு தலைமைச் செயலாளா டி. வி. அந்தோணி ஆகியோர் உடன் இருக்கிறார்கள்.

## ஆர்.எம்.வீ.க்கு போலீஸ் இலாகா

### முதல்வர் இலாகா ஒதுக்கீடு விவரம்

சென்னை, ஜூலை 26- முதல்வர் புரட்சித்தலைவர் அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன், முத்துசாமி ஆகியோர் வெளிநாடு செல்வதையொட்டி அவர்களின் இலாகாக்கள் அமைச்சர்களுக்கு பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளது.

முதல்வர் புரட்சித் தலைவர் ஜப்பான் செல்வதைத்தொடாந்துஅவரது இலாகாக்கள் எந்தெந்த அமைச்சரிடம் கொடுக்கப்பட்டுள்ளது என்ற விவரத்தை அரசு தலைமை செயலாளர் டி. வி. அந்தோணி தெரிவித்தார்.

அவர் கூறியதாவது:-

முதல்வரிடம் இருந்த பொதுத்துறை, மற்றும நிர்வாகம், ஐ ஏ. எஸ். மற்றும் அகில இந்திய சர்வீஸ் ஆகியவை நிதி அமைச்சர் பொறுப்பில் இருக்கும்.

மாவட்ட வருவாய் அதிகாரிகள், துணை கலெக்டர்கள், போலீஸ், லஞ்ச ஒழிப்பு திட்டம் ஆகியவை அமைச்சர் ஆர். எம். வீ. யிடம் இருக்கும்.

சர்க்கரை கழிவுபாகு [மொலாசஸ்] தொல் பொருள் ஆராய்ச்சி மதுவிலக்கு மற்றும் கலால் ஆகிய இலாகாக்கள் அமைச்சர் கே.ஏ.கே. யிடம் இருக்கும்.

இநத இலாகாக்களில் பெரிய முடிவுகள் எடுப்பதாக இருந்தால் முதல்வர் வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்த பிறகே எடுக்கப்படும்.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனிட மிருந்த மின்சாரதுறை அமைச்சா பொன்னையனிடம இருக்கும்.

அமைச்சர் முத்துசாமியிடம் இருந்த போக்குவரத்துத்துறை அமைச்சர் காளிமுத்துவிடம் இருக்கும

இலாகா மாற்ற விவரங்களை முதல்வா நேற்று மாலைதான் ஆளுனருக்கு அனுப்பினார் ஆளுனர் நேற்று இரவுதான் கையெழுததிட்டார்.

இவ்வாறு டி. வி. அந்தோணி கூறினார்.

## ரூ. 15 கோடியில் குடிநீர் திட்டம்: முதல்வர்புரட்சித்தலைவர்உத்தரவு

சென்னை, ஜூலை 25— சென்னை நகருக்கு இடைக்கால குடிநீர் திட்டத்துக்காக ரூபாய் 15 கோடிக்கான ஒரு திட்டத்துக்கு முதல்வர் புரட்சித் தலைவர் அனுமதித்துள்ளார்.

இதன் மூலம் சென்னை நகருக்கு ஒரு கோடியே 20 லட்சம் காலன் தண்ணீர் கூடுதலாகக் கிடைக்கும். இந்தத்திட்ட வேலைகள் உடனடியாகத் துவங்கப்படுகிறது என்று தலைமைச் செயலாளர் டி. வி. அந்தோணி நிருபர்களிடம்கூறினார்.

அவர்மேலும்கூறியதாவது

சென்னை நகரில்சுகாதார பிரச்சினை ஆடு, மாடுகளை அகற்றுதல், நடை பாதைக் கடைகளை அகற்றுதல் போன்ற திட்டங்கள் இருந்தாலும் சென்னை நகர குடிநீர் பிரச்சினையில் முதல்வர் அதிக கவனம் செலுத்துகிறார்.

கடந்த 12 ஆண்டுகளில் இருமுறை நகரில் தண்ணீர பஞ்சம் ஏற்பட்டது.

ஆகவே சென்னை நகரில் குடிநீர் தேவையை பூர்த்தி செய்ய நீண்ட கால திட்டத்தை போட்டுள்ளார் குறுகிய காலத் திட்டத்தையும் ஏற்படுத்த உத்தர விட்டுள்ளார்.

நீண்டகாலத் திட்டமாக தெலுங்கு கங்கா திட்டம் போடப்பட்டுள்ளது. அதன் மூலம்சென்னைக்கு 15டி.எம்சி. தண்ணீர் கிடைக்கும். இப்போது 52 மில்லியன் காலன் தண்ணீர் வழங்கப் படுகிறது.

### நிலத்தடி நீர்

தெலுங்கு கங்கா திட்டம் நிறைவேறினால் 200 மில்லியன் காலன் தண்ணீா தினமும் வழங்க முடியும். அதற்கு முன்னதாக குறுகிய காலத் திட்டம் ஒன்றைச் செயல்படுத்த ரூ.15 கோடி செலவில் ஒரு திட்டத்துக்கு முதல்வர் அனுமதி வழங்கியிருக்கிறார். சென்னை நகரில் குடிநீர் வசதியை பெருக்குவதற்காக ஆரணை, பொடுதலை ஆறு மற்றும் பாலாறு படுகைகளில் நிலத்தடி நீர் பற்றி ஆய்வு செய்ய ஐ. நா. தொழில் நுட்ப கூட்டுறவு மற்றும் வளர்ச்சிக்குழுமம் ஒத்துக்கொண்டது. இதற்கு அவர்கள் 1.1 மில்லியன் அமெரிக்க டாலர் தருகிறார்கள். தமிழக அரசு 102 லட்சம் ரூபாய் முதலீடு செய்தது.

1982 ஆண்டு தொடங்கிய அந்த ஆய்வு இந்த ஆண்டு செப்டம்பரில் முடிகிறது. புதிதாக பூண்டி, பொடுதலை ஆற்றுப்படுகை, மற்றும் கன்னிகைப்பேர் பகுதிகளில் நிலத்தடிநீர் ஆதாரங்கள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன.

### திட்டத்தின் ஒரு பகுதி

இந்தத் திட்டத்தின் ஒரு பகுதியாக ரூ.15கோடிசெலவில் 1கோடியே 20லட்சம் காலன் தண்ணீரை இந்த நீர் ஆதாரங்களில் இருந்து எடுத்து வழங்க முதல்வர் ஆணையிட்டுள்ளார்.

### பஙகேற்றோர் விவரம்

ஐக்கிய நாட்டு வளர்ச்சிக் குழு கூட்டம் நேற்று நடந்தது. இதில் நான் (தலைமை செயலாளர்)கலந்துகொண்டேன் ஐ நா. வளர்ச்சித் திட்டக் குழு சார்பில் ஆர். டி. மககர் ஐ. நா. தொழில் நுட்ப கூட்டுறவு வளர்ச்சிக் குழு சார்பில் யூரிகொலான் டாக்டர் பான்சிக், மத்திய அரசு சார்பில் பாலசுப்பிரமணியம் ஆகியோர் கலந்து கொண்டனர்.

நேற்று கூடிய குழு தமிழக அரசு தொடங்கவிருக்கும்இந்தரூ.15 கோடி திட்டத்துக்கு ஆர்வம் காட்டி பாராட்டியது. என்று தலைமைச் செயலர் கூறினார்.



ஜப்பானுக்குச் செல்லும் வழியில் டெல்லி செல்வதற்கு முதல்வர் புரட்சிததலைவர் விமானததில் ஏறும்போது எடுத்தபடம்

## காவிரி நீர்: கர்நாடகம் ஒப்புதல்

சென்னை, ஜூலை. 2— மேட்டூர் அணைக்கு மேலும் பத்தாயிரம் கன அடி தண்ணீர் வந்து கொண்டு இருக்கிறது என்று தமிழக பாசனத்துறை அமைச்சர் யூசுப் நிருபர்களிடம் கூறினார்,

கபினி நீர்த்தேக்கத்திலிருந்து காவிரியில் பத்தாயிரம் கன அடி தண்ணீர் திறந்துவிட கர்நாடக அரசு ஒப்புக்கொண்டுஇருக்கிறது.

அதன்படி கபினி நீர் தேக்கத்திலிருந்து காவிரியில் தண்ணீர் திறந்துவிடப்பட்டுள்ளது.

தற்போது சாதாரணமாக மேட்டூர் அணைக்கு 3 ஆயிரம் கனஅடி தண்ணீர் வந்துகொண்டிருக்கிறது என்று யூசுப் கூறினார்.

## உள்ளாட்சித்தேர்தல் சில நாட்கள் தள்ளிவைப்பு

சென்னை, ஜூலை, 26— பஞ்சாயத்து நகர சபை தேர்தல் தேதி சில நாட்களுக்கு ஒத்தி வைக்கும நிலைமை ஏற்பட்டுள்ளது என்று அமைச்சர் ப.உ.ச. நிருபர்களிடம் கூறினார்.

ஆனால் இதற்கான வாக்காளர் பட்டியல் ஆகஸ்டு 2-ந தேதி வெளியிடப்பட வேண்டும் வாக்காளர்பட்டியலை கூட்டுறவு அச்சகத்தில் அச்சிட கொடுத்திருக்கிறோம்.

அவர்களால் ஆகஸ்ட் 2ந்தேதிக்குள் அச்சிட்டுத்தர முடியாதநிலை ஏற்பட்டுள்ளது,

எனவே சிறிதுநாட்களுக்கு பஞ்சாயத்து நகரசபைத்தேர்தல்களை ஒத்திவைக்க வேண்டியுள்ளது. அடுத்த தேதிவரைவில் அறிவிக்கப் படும் என்று அமைச்சர் ப.உ.ச. கூறினார்.



**வாணிகம்**

உற்பத்தியாளர் - உபயோகிப்போர் இடையில் நிற்பவர் வணிகர். அதிக ஆசைப்படாமல், நியாயமான இலாபம் பெற்றுச் செய்தால் வாணிகமும் நல்ல தொழிலே.

—பேரறிஞர் அண்ணா

**நடுவுநிலை**

மனச்சான்றுப்படி ஒழுகுவோர் என்றும் நடுவுநிலை தவற மாட்டார். தமக்கே துன்பம் வரும் என்றாலும் அவர் தன்னிலை பிறழமாட்டார்.

—தந்தைபெரியார்

# அதிக வீடுகள் கட்ட மத்திய அரசு உதவி: மணிமாறன் தகவல்

சென்னை, ஜூலை 26- தமிழகத்தில்வீட்டுவசதி வாரியம் கட்டும் வீடுகளுக்குநிலங்களை கையகப் படுத்த தேவையான நிதி உதவியை மத்திய வீட்டு வசதி கழகம் தர முன் வந்துள்ளது. இந்தியாவிலேயேமுதன்முறையாக தமிழகத்திற்குதான் இதுபோன்ற உதவி வழங்கப் படுகிறது.

தமிழ்நாடுவீட்டு வசதி வாரியத் தலைவர் திருப்பூர் வி.ஆர். மணிமாறன் புது டெல்லியில் ஹட்கோ நிறுவனத்தின் தலைவர் சர்மாவை சந்தித்து வாரியப் பணிகளை துரிதமாக செயல்படுத்த ஏதுவாக உள்ள செயல்பாடுகளை குறித்து விவாதித்தார்.

இதன் பயனாக சுமார் ஒன்றரை கோடி ரூபாய் கடன் தொகை உடனடியாக வழங்கப்பட்டது, மேலும் இந்த ஆண்டின் குறியீட்டு இலக்கு ரூபாய் 27 கோடி. கூடுதலாக தொகை தேவை எனத் தலைவர் வற்புறுத்தியதற்கிணங்க கடன் வழங்கும் தொகை ரூபாய் 37 கோடி அளவுக்கு அதிகரிக்கப்பட்டுள்ளது.

## ஹட்கோ உதவி

தமிழ் நாடு வீட்டுவசதி வாரியம் நிலம் கையகம் செய்வதற்கான பணத்தை ஹட்கோ நிறுவனமே கொடுப்பதற்கு முன்வந்துள்ளது. இந்தியாவிலேயே இதுவரை எந்த மாநிலத்திற்கும் ஹட்கோ நிறுவனம் நிலங்களைக்கையகப்படுத்த நிதி உதவி அளித்ததில்லை.

முதன்முறையாக தமிழ் நாட்டுக்கு ஹட்கோ நிறுவனம், நிலங்களைக் கையகப்படுத்த நிதி உதவி அளிக்க முன்வந்துள்ளது.

வாரியத்திற்கு தேவைப்



படும் மரச்சாமான்கள் கிடைப்பதற்காக அவினாசியில் மரவேலைப் பிரிவு ஏற்படுத்தி நமக்குத் தேவையான பொருள்களை உற்பத்தி செய்து கொடுப்பதற்கும், ஹட்கோ நிறுவனம் பண உதவி அளிக்க முன் வந்துள்ளது. மற்றும் நெய்வேலி அருகே பிளை ஆஸ் செங்கல் தொழிற்சாலை ஆரம்பிப்பதற்காகவும் மேற்படி நிறுவனம் பணம் வழங்க முன்வந்துள்ளது.

பல்வேறு வகையான குடியிருப்புகளுக்கு உரிய நிர்ணய விலையை உயர்த்தும் நோக்கு மைய அரசின் பரிசீலனையில் உள்ளது. அது முடிவு எடுக்க காலதாமதமாகும்பட்சத்தில் ஹட்கோ நிறுவனம் தற்காலிகமாக 20 சதவிகிதம் வரையில் ஏற்கனவே அது நிர்ணயித்துள்ள விலையில் உயர்த்தி கொடுக்க ஆலோசித்திருப்பதாக சொல்லப்பட்டுள்ளது.

# அமைச்சர் அருணாசலம் திடீர் சோதனை

கடலூர், ஜூலை 26— தென்னாற்காடு மாவட்டம் கோமுகி அணைக்குக் கீழ் இயங்கி வரும், அரசினர் உண்டுறைவிட உயர்நிலைப் பள்ளியில் ஆதிதிராவிடர் நலத்துறை அமைச்சர் அருணாசலம் திடீரென்று சென்றுசோதனையிட்டார்.

அப்பள்ளியில் குடிசையில் அமைந்துள்ள சமையற்கூடம் சுகாதாரக் கேடு விளைவிக்கக் கூடும் என்றும், அதற்கு மாற்றுக் கட்டிடம் கட்டுவதற்கு உடனே நடவடிக்கை எடுக்கும்படி அதிகாரிகளுக்குஉத்திரவிட்டார்.

அப்பள்ளியில்பெண்களின் எண்ணிக்கை அதிகம்இருப்பதால் அவர்களின் நலத்தை கருத்தில் கொண்டு அப்பள்ளியைச் சுற்றி சுவர் எழுப்புவதற்கு உடனடியாக நடவடிக்கை எடுக்கும்படி அதிகாரிகளுக்கு உத்தர விட்டார். கல்வராயன் மலையில் கொண்டியாநத்தம் பகுதியில் வாழும் மலைவாழ் மக்களையும், கொட்டந்தரை பகுதியில் வாழும் மக்களின் குறைகளையும் விசாரித்தறிந்ததோடு அவர்களின் முக்கியமான கோரிக்கையான ஒரு உண்டுறைவிடப்பள்ளித் தேவையை ஆய்வு செய்வதாகவும் அமைச்சர்தெரிவித்தார்.

# நிலக்கரி இறக்குமதி செலவை மானியமாக ஏற்க வலியுறுத்தல்

## ஆர். ராமகிருஷ்ணன பேச்சு

புதுடெல்லி, ஜூலை, 26— தமிழக அனல் மின் நிலையங்களுக்கு நிலக்கரி இறக்குமதி செய்யப்படும் செலவினை மைய அரசு மானியமாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று மாநிலங்கள் அவையில் கழக உறுப்பினர் ஆர். ராமகிருஷ்ணன் வலியுறுத்தினார்.

நிலக்கரி சுரங்கங்கள் அபிவிருத்தி பற்றிய பிரச்சினையின் மீது அவர் மேலும் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

மின் உற்பத்தியில் தமிழகம் அனல்மின் நிலையங்களைத்தான் பெரிதும் நம்பி இருக்க வேண்டியிருக்கிறது.

அனல்மின் நிலையங்கள் இயங்க நிலக்கரி தேவை, அந்த நிலக்கரி பல்லாயிரம் மைல்களுக்கு அப்பால் பீகார் மாநிலத்திலிருந்து தமிழகத்திற்கு வர வேண்டியிருக்கிறது.

### மின் கட்டண உயர்வு

இப்படி ரெயிலில் வருகின்ற நிலக்கரிக்கு கட்டணம் செலுத்தவேண்டும். நிலக்கரி வருவதிலும் காலதாமதம் ஏற்படுகிறது. அப்படியே வந்தாலும் ஆயிரக்கணக்கான டன்



கல்லும் மண்ணுமாகப் போய்விடுகின்றன.

இதனால் மின் உற்பத்திச் செலவு அதிகமாகிறது. மின் கட்டணத்தையும் உயர்த்த வேண்டிய நிலை ஏற்படுகிறது. மின் கட்டண உயர்வால் நடுத்தரமக்களும், சிறுதொழில்கள் செய்வோரும் பெரிதும்பாதிக்கப் படுகின்றனர்.

மின் உற்பத்தி செலவும் விநியோக விலையும் முரண்பாடாக இருக்கிறது என்று உலக வங்கி சுட்டிக் காட்டுகிறது.

எனவே எப்படி இந்தியா முழுமையிலும் இரும்புக்கும் சிமெண்டுக்கும் ஒரே விலை இருக்கிறதோ அதே போல மின்கட்டணமும் ஒரே சீராக இருக்க வேண்டும்.

இதற்கு நிலக்கரி இறக்குமதி செய்வதற்கான செலவினை மைய அரசு மானியமாகக் கொடுக்கவேண்டும்.

எண்ணூர் அனல் மின் நிலையத்திற்கு ஒரு லட்சத்து இருபது ஆயிரம் டன் நிலக்கரி ஒதுக்கீடு செய்யப்பட்டது. ஆனால் இதில் ராமகுண்டம் அனல் மின் நிலையத்திற்கு 40 ஆயிரம் டன் நிலக்கரியை ஒதுக்கிவிட்டார்கள்.

எனவேதான் ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் இருந்து 5 லட்சம்டன் நிலக்கரி இறக்குமதி செய்ய தமிழக அரசு அனுமதி கோரியது. 1 லட்சம் டன் இறக்குமதி செய்யத்தான் அனுமதி அளிக்கப்பட்டு இருக்கிறது.

### அமைச்சர் வாக்குறுதி

அனல் மின் நிலையங்களை நம்பியிருக்கும் தமிழகத்திற்கு இன்னும் 4 லட்சம் டன் நிலக்கரி தேவை. அதனை இறக்குமதி செய்ய மைய அரசு அனுமதி தர வேண்டும்.

இவ்வாறு ஆர்.ராமகிருஷ்ணன் கூறினார்.

கனிவளத்துறை அமைச்சர் சாத்தே பதிலில்:- ராமகிருஷ்ணனின், கோரிக்கையை மைய அரசு அனுதாபத்துடன் பரிசீலிக்கும் என்று கூறினார்.

# உலக இளைஞர் மாநாடு: கோலாகல ஆரம்பம்

மாஸ்கோ, ஜூலை 26— லட்சோப லட்சம்இளைஞர்கள் பங்கு கொள்ளும் உலக இளைஞர் விழா இன்று 27ம் தேதி மாஸ்கோவில் கோலாகலமாக ஆரம்பமாகிறது.

இந்த விழாவில் கலந்து கொள்ள அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்தின் சார்பாக சட்டமன்ற உறுப்பினர்கள் கே.பி. ராமலிங்கம், திண்டுக்கல் பிரேம்குமார், மயிலாடுதுறை தங்கமணி ஆகியோர்சென்று இருக்கிறார்கள்.

உலக இளைஞர் மாணவர் விழாப் பிரதிநிதிகளும் விருந்தினர்களும் இப்போது மாஸ்கோவுக்கு வந்து கொண்டிருக்கின்றனர்.

விழாவுக்கான தயாரிப்புகள் முடிவடைந்தன.

மாஸ்கோவிலுள்ள லெனின் ஸ்டேடியத்தில் விழா தொடங்குகிறது. பல லட்சக்கணக்கான பார்வையாளர்களுக்கும் கோடிக் கணக்கான டெலிவிஷன் ரசிகர்களுக்கும் அது கண்கொள்ளாக் காட்சியாகும்.

"ஐந்தாண்டுகளுக்குமுன்பு மாஸ்கோவில் நடைபெற்ற ஒலிம்பிக் போட்டிகளின் தொடக்க விழா மற்றும் நிறைவு விழாவை மிஞ்சும் விதத்தில் உலக மக்களைஎல்லாம் கவரும் வகையில் வண்ணமயமான இந்தவிழாவின் நிகழ்ச்சிகள் அமைந்திருக்கும்" என்று விழாவின் அமைப்பாளர்கள் கூறினர்.

உலக இளைஞர் விழா நெடுங்காலமாகநடைபெறுகிறது. 1945 அக்டோபர் நவம்பரில் லண்டனில் முதன் முதலாக உலகஇளைஞர்மாநாடுநடைபெற்றது. பல நாடுகளைச் சேர்ந்த இளைஞர்களை ஒன்றுபடுத்தும் சாதனமாக இவ்விழா விளங்க வேண்டும் என்றுமாநாட்டுப் பிரதிநிதிகள் தீர்மானித்தனர்.

உலக இளைஞர்களின் சமாதான ஆர்வத்தை இவ்விழாக்கள் பிரதிபலிக்கின்றன.

மாநாட்டின் அரசியல் நிகழ்ச்சி நிரலில்350 அம்சங்கள்உள்ளன,சமாதானம்மற்றும் படைக் குறைப்பு ஏகாதிபத்திய எதிர்ப்பு-ஒருமைப்பாடு, இளம் தொழிலாளர்களின் உரிமைகள், கூட்டுச்சேரா இயக்கம், சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பு, உழைக்கும் பெண்களின் உரிமைகள். இவை பற்றி மிகமுக்கியமாக விவாதிக்கப் படும்.

## உழைத்து தந்தனர் நன்கொடை

உலக இளைஞர் விழாச் செலவுகள் அனைத்தையும் யார் கொடுப்பர்? இளைஞர்களேகொடுப்பர். ஒவ்வொரு தேசியத் தூதுக் குழுவைச் சார்ந்த ஒவ்வொரு உறுப்பினரும் நுழைவுக் கட்டணமாக25 அமெரிக்கன் டாலர்களும், விழாவில்பங்கெடுப்பதற்காக அன்றாடம் பத்து டாலர்களும் செலுத்துவர்.

உலகின் அனைத்துப் பகுதிகளைச் சேர்ந்த இளைஞர்களும் "சர்வதேச ஒருமைப்பாட்டு நிதி"க்குத் தமது காணிக்கையைச் செலுத்துவர். பணவசதி குறைவாகவுள்ள தூதுக்குழுக்களுக்கு இந்த நிதியிலிருந்து பண உதவி வழங்கப்படும்.

விழாத் தயாரிப்புகளுக்கான செலவுகள் சோவியத் இளைஞர்களின் நன்கொடையால் நடைபெற்றன. இதற்கென ஓராண்டுக்கு முன்பு சோவியத் ஸ்டேட் பாங்கில் ஒரு விசேடக் கணக்கு திறக்கப்பட்டது விழாவுக்கு நிதி திரட்டும் பொருட்டு நடைபெற்ற இரண்டு "தேசிய உழைப்பு தான" நிகழ்ச்சிகளில் பங்கேற்ற இளைஞர்கள், 5கோடியே 70 லட்சம் ரூபிள்களை தமது நன்கொடையாக வழங்கியுள்ளனர். அதாவது 90 கோடி ரூபாய் வழங்கியுள்ளனர்.

# ஆகாயத்தில் கண்டபடி திரியும் செயற்கைகோள்

வாஷிங்டன் ஜூலை 26- விண்வெளிக்கு செலுத்தப்பட்ட ஒரு செயற்கைக் கோள் பழுதுபட்டு கண்டபடி வானத்தில் சுற்றுகிறது.

எட்டுகோடி டாலர் செலவில்ஸின்காம்தகவல்போக்குவரத்துச் செயற்கைக்கோள் ஏப்ரல் மாதம் விண்வெளியில் செலுத்தப்பட்டதல்லவா? செலுத்தப்பட்டதிலிருந்தே அதுசெயலிழந்து பயனற்றுப் போய் கண்டபடிதிரிகிறது.

இதனை "டிஸ்கவரி"விண்வெளி ஓடத்தின் விண்வெளி விமானிகள் ஆகஸ்டு கடைசியில் பழுது பார்க்கப் போகின்றனர். அதற்குரிய திட்டங்களை அமெரிக்க விண்வெளி நிலைய அதிகாரிகள் விளக்கியுள்ளனர்.

நாஸா (அமெரிக்க விண்வெளி நிலையம்) அதிகாரி சொன்னதாவது:

திட்டமிட்டபடி விண்வெளி விமானிகள் இதற்கென்றே சிறப்பாகத் தயாரிக்கப்பெற்ற கருவிகளைக் கொண்டு,இந்தத் தறுதலை செயற்கைக்கோளைபிடித்து இழுத்துவந்து பழுதுபார்ப்பர். இதற்குஇந்த விண்வெளி வீரர்கள் 6 மணி நேரம் விண்வெளியில் நடக்கவேண்டியிருக்கும்.

டிஸ்கவரி ஓடத்தில் ஐந்து விண்வெளி வீரர்கள் உள்ளனர் எட்டு நாள் விண்வெளி உலாவில் மூன்று புதிய செயற்கைக் கோள்களையும் விண்வெளியில் செலுத்துவர் அத்துடன் விஞ்ஞான ஆய்வு ஒன்றையும் நடத்துவர் கரியகச் சேர்க்கைப் பொருளான படிகக்கல் வளர்ச்சியினை ஆராயும் பணி அது.

ஆகஸ்டு 24-ம் தேதி காலை ஃபுளோரிடாவில் கென்னடி விண்வெளி நிலையத்திலிருந்து டிஸ்கவரி விண்வெளிப் பயணத்திற்குப் புறப்படும்.

அதற்கு முன்னதாக, அதனுடைய 'அக்கா' சாலஞ்சர் ஓடம் ஜூலை 21-ம் தேதி விண்வெளிக்குப் புறப்பட தற்காலிகமாக முடிவு செய்யப்பட்டுள்ளது.

இது விண்வெளிசெல்வதில் தடங்கல் ஏற்பட்டது.

ஜூலை 12ம்தேதி சாலஞ்சர் புறப்படுவதற்குமுன்றே விநாடிகள் இருக்கையில் அது தடைபட்டது. காரணம் அதிலிருந்த கம்ப்யூட்டர்கள் ஓடத்தின் முக்கிய இன்ஜின்களை மூடிவிட்டன சாலஞ்சர் வானியல் சோதனைகளை நடத்தும். அதற்குஐரோப்பா அமைத்த 'ஸ்கைலாப் பயன்படுத்தப் படும்

ஸின்காம்செயற்கைகோள் அமெரிக்க ராணுவத் தகவல்களை அனுப்ப உலகளாவிய அமைப்பின் ஒரு பகுதியாக அதனை உருவாக்கினர். இந்த அமைப்பு முழுமை பெறசெயலாற்ற இன்னும் இரண்டு செயற்கை கோள்கள் தேவை.

இந்த செயற்கைக்கோள் டிஸ்கவரியிலிருந்து ஏப்ரல் மாதம் செலுத்தப்பட்டது. இந்தியப் பெருங்கடலுக்கு 36,680 கிலோ மீட்டர் உயரத்தில் அதன் விண்வெளிப் பாதைக்குள் புகுவது தடைபட்டது. காரணம்45 நிமிடம் கழித்து எரிய வேண்டிய ராக்கெட் மோட்டார் எரியவில்லை.

விண்வெளிவீரர்கள்கையில் வைத்திருந்த கருவிகளைக் கொண்டு என்னவெல்லாமோ செய்து பார்த்தனர். எனினும் பலிக்கவில்லை. இதற்காக அவர்கள் மூன்று மணிநேரம் விண்வெளியில் நடந்தனர். ஆனால் அவர்களுடைய முயற்சி தோல்விகண்டது.

ஹியூஸ் கம்யூனிகேஷன்ஸ் இன்கார்ப்பரேட்டடு என்ற நிறுவனத்திற்கு ஸின்காம் சொந்தம். நாஸா அதிகாரிகளுக்கும் சரி, இந்த நிறுவனத்தின் அதிகாரிகளுக்கும் சரி,கோளில் எங்கு சிக்கல் இருக்கிறது என்பது துல்லியமாகத் தெரியவில்லை. ஆனால் நாஸா விண்வெளிப் பாய்ச்சல் இயக்குநர் ஜே கிரீன் செய்தியாளர்களிடம் "விண்கலத்தில் எதெல்லாம் பொருத்த முடியுமோ அவையெல்லாம் பொருத்தப்படும் பொருத்த முடியாவிட்டால் தட்டிக் கழிக்கப்படும் என்று கூறினார்.

# கொலை வழக்கு 2பேர் கைது

சென்னை, ஜூலை. 26— திருவொற்றியூரில் சாராயக் கடை வைத்திருப்பவர் குரிஎச்சன். இவரது பங்குதாரர் ராதா கிருஷ்ணன்.

ராதாகிருஷ்ணன் முன்பு கொலை செய்யப் பட்டார். அவரை குரிஎச்சன்தான் ஆள்வைத்து கொலைசெய்திருப்பதாக ராதாகிருஷ்ணனின் தம்பி சந்தேகப்பட்டாராம்.

குரிஎச்சன் கொலை செய்யப்பட்டார். இது தொடர்பாக ராதாகிருஷ்ணனின் தம்பி ரத்தினம்,உறவினர் நாராயணன் ஆகியோர் கைது செய்யப்பட்டனர்.

# ஆமதாபாத்தில் துப்பாக்கிச் சூடு: ஒருவர் சாவு

ஆமதாபாத் ஜூலை 26- குஜராத் மாநிலம் ஆமதாபாத நகரில் மீண்டும் வன்முறைசம்பவங்கள் நடந்தன 6பேர் கத்தியால் குத்தப்பட்டனர்.

வன்முறையாளர்களை கலைக்க போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர்,

இதில் ஒருவர் உயிர் இழந்தார்.கலுப்பூர் பகுதியில் இரண்டு கோஷ்டிகள் ஒன்றை ஒன்று கற்களை வீசித் தாக்கிக் கொண்டன, அவர்களை கலைக்க போலீசார் துப்பாக்கி சூடுநடத்த வேண்டி ஏற்பட்டது என்று போலீசார் தெரிவித்தனர்.

# அன்னிய செலாவணி பெற்றுத் தரும் பாய், நகை, பிண்ணாக்கு

புதுடெல்லி,ஜூலை26- "பிண்ணாக்கு" என்று ஏளனமாகக்கூறிவிட முடியாது. இந்தியாவுக்கு அன்னிய செலாவணி சம்பாதித்துத் தரும் பொருள்களில் பிண்ணாக்கும் ஒன்று.

இந்தியாவுக்கு பெருமளவு அன்னியச் செலாவணியை கடந்த மூன்று ஆண்டுகளில் பெற்றுத் தந்த ஏற்றுமதிப் பொருள்கள்வருமாறு:

"இரத்தினக் கற்கள், நகைகள், எந்திரங்கள், போக்குவரத்துச் சாதனங்கள், ஆயத்த ஆடைகள், தோல் மற்றும் தோல் பொருட்கள் இரசாயனங்கள், தேயிலை, பாய் கடற்பொருள்கள், இரும்புத்தாது, புகையிலை காப்பி, முந்திரி, காய்கறி, பழங்கள், வாசனைப் பொருட்கள், பிண்ணாக்கு, கைத்தறி கம்பளங்கள் கலைபொருள்கள், கச்சா எண்ணெய், தாது எரி பொருள்கள், இளக்கிகள்.

மாநிலங்களவையில் தீபன்கோஷ் எழுப்பிய கேள்விக்கு பதிலளித்து அமைச்சர் சங்மா 1985—86—ஆம் ஆண்டுக்கான ஏற்றுமதி இலக்காக 11,736 கோடி ரூபாய் நிர்ணயிக்கப் பட்டிருப்பதாக கூறினார். 1984—85..ம் ஆண்டைவிட 1985—86—ல் ஏற்றுமதி அளவு அதிகரித்திருப்பதாக தீபன்கோஷ் கேள்விக்குப் பதிலளிக்கும் போது வர்த்தக இணை அமைச்சர் பி.ஏ.சங்மா கூறினார்,

# மூன்று பெண்டாட்டிக்காரர் விஷம் குடித்து தற்கொலை

விழுப்புரம், ஜூலை 26 மூன்று பெண்டாட்டிக் காரர் ஒருவர் அவரது மனைவிகளுக்குள் ஏற்பட்ட சண்டையினால் விஷம் குடித்து தற்கொலை செய்து கொண்டார்.

கடலூர் அருகே உள்ள மணவெளி சாலைகரையைச் சேர்ந்தவர் குப்புசாமி (வயது 66)-இவருக்கு மூன்று மனைவிகள்.

முதல் மனைவியின் பெயர் பட்டம்மாள் (வயது 50) இவள் சில வருடங்களுக்கு முன்பு நோய்வாய்ப்பட்டு இறந்து விட்டாள்.

இதனால் குப்புசாமி அங்கம்மாள் என்ற பெண்ணை இரண்டாவது திருமணம் செய்துகொண்டார்.ஆனால் திருமணமாகிபலவருடங்கள் ஆகியும் அங்கம்மாளுக்கு குழந்தை பிறக்கவில்லையாம்.

எனவே குப்புசாமி லட்சுமி என்ற பெண்ணை மூன்றாவதாக திருமணம் செய்ய முடிவு செய்தார். இதற்கு அங்கம்மாள் கடும் எதிர்ப்பு தெரிவித்தாள்.

அதையும் பொருட்படுத்தாமல் குப்புசாமி லட்சுமியை 3-வது மனைவியாக திருமணம்செய்துகொண்டாராம்.

அங்கம்மாளையும், லட்சுமியையும் குப்புசாமி ஒரே வீட்டில்குடிவைத்திருந்தார்.

இதனால் அவர்கள் இருவருக்கும் அடிக்கடி சண்டை ஏற்பட்டது. இவர்கள் சண்டையை தீர்த்து வைக்க குப்புசாமியினால் முடியவில்லை. இதனால் மனமுடைந்த குப்புசாமி தற்கொலை செய்து கொள்ள முடிவு செய்தார்.

சம்பவத்தன்றுஇரவு குப்புசாமி ஒரு பாட்டில் சாராயத்தை வாங்கி வந்தார். தனது முதல் மனைவியை வெளியே கடைக்கு போய் வரும்படி கூறிவிட்டு இரண்டு கிளாஸ்களில் சாராயத்தை ஊற்றினார், பின்னர் தான் வைத்திருந்த விஷத்தை அதில் ஊற்றிவிட்டு ஒரு கிளாசை லட்சுமியிடம் கொடுத்து குடிக்கச் சொன்னார். தானும் ஒரு கிளாஸ் சாராயத்தை குடித்தார்.

இரண்டு பேரும் அந்த இடத்திலேயே மயங்கி விழுந்தனர். இருவரும் கடலூர் ஆஸ்பத்திரிக்கு எடுத்து செல்லப்பட்டனர் அங்கு சிகிச்சை பலனளிக்காமல் மரணமடைந்தனர்

இது குறித்து போலீசார் வழக்கு பதிவு செய்து விசாரணை நடத்திவருகின்றனர்.

# அமெரிக்காவிலும் பசி-பட்டினி!

வாஷிங்டன், ஜூலை 26- உலகிலேயே பணக்கார நாடுகளில் ஒன்றான அமெரிக்காவிலும் வறுமை அதிகரித்து வருகிறதென்று ஹார்வார்டு பல்கலைக் கழக ஆய்வாளர்கள் சிலர் கூட்டாகச்சேர்ந்து நடத்திய ஆய்வில் தெரியவந்துள்ளது.

மேலும் வேலையில்லாத் திண்டாட்டம், வரிச்சுமை, சமூக நல காரியங்களுக்கு அரசின் உதவி குறைப்பு ஆகியவற்றின் காரணமாக ஏராளமான பேர் பிச்சைக்காரர்கள் போன்று வாழ்க்கை நடத்தி வருகின்றார்கள்,இவர்களின் எண்ணிக்கை இப்போது 3 கோடியே 55 லட்சமாக உயர்ந்து இருக்கிறது, அது மட்டும் இல்லாமல் 2 கோடி அமெரிக்கர்கள் போதிய சத்துணவு இல்லாத நிலையில் இருக்கிறார்கள். நியூயார்க்நகரில் 10 ஆயிரம் பேர்வீடு இல்லாமல் சிரமப் படுகிறார்கள். அவர்களில் பலர் நடைபாதையில்இரவு நேரத்தைக்கழிக்கிறார்கள். பசி பட்டினி மயக்கத்துடன் உறங்குபவர்களும் உண்டு என அந்த ஆய்வில் தெரிய வந்துள்ளது.

# அமெரிக்காவில் பரவும் நூதன நோய்!

மேகம், கிரந்தி, போன்ற பால்வினை நோய்களால் அவதிப்படுவோரின் குழந்தைகளும், அந்நோயினால் பாதிக்கப்படுகின்றனர் என்பது நாம் அறிந்த விஷயம். ஆனால், மருத்துவ இயல் அந்நோய்களைத் தீர்க்க மருந்துகளை கண்டுபிடித்துள்ளது.நோய்கொண்டவர் சிகிச்சை பெற்றுக் கொண்டால், அந்நோய் அவரது சந்ததிகளுக்குப் பரவுவதை தடுத்து விடலாம்.

ஆனால் இப்பொழுது புதிதாக 'எய்ட்ஸ் என்ற ஒரு நோய் தலையெடுத்து உள்ளது. (பெறப்பட்ட பாதிப்பில் குறைபாடுத் தொடர் நிகழ்வு) என்ற ஆங்கிலச் சொற்றொடரின் எழுத்துக்களைக் கொண்டு 'எய்ட்ஸ் என்று அது வழங்கப்படுகிறது.

அந்த நோய் முதன் முதலாக, அமெரிக்காவின் ஓரினப் புணர்ச்சியாளர் (ஹோமோசெக்சலிஸ்ட்) களிடமும், போதைப் பொருளுக்கு அடிமையானோரிடமும் கண்டு பிடிக்கப்பட்டது.

இந்த நோய் ஏன் எப்படி அவர்களிடையே உருவாகியது என்பதை இன்னமும் ஆராய்ச்சியாளர்கள் கண்டு பிடிக்கவில்லை.

இந்த நோய் அமெரிக்க டாக்டர்களை அசர வைத்துள்ளது. அதற்கு எந்த மருந்தும் கிடையாது. நோயால் பாதிக்கப்பட்டவர்கள் இன்றோ நாளையோ நிச்சயம் செத்தேதான் தீர வேண்டும்,

1981லிருந்து இன்றுவரை 11,000 பேர்இந்தநோயால் பாதிக்கப்பட்டுள்ளனர். அவர்களில் 5641 பேருக்கு மேல் இறந்துவிட்டார்கள்.

இப்போது விஷயம் என்னவெனில் அமெரிக்க டாக்டர்களுக்கு ஒருபுதுப் பிரச்சினை தோன்றியுள்ளது, இந்த நோய் பீடிக்கப்பட்ட குழந்தைகள் அவர்களிடம் வரத் தொடங்கியுள்ளன. அட்லாண்டாநோய்க்கட்டுப்பாட்டுக் கேந்திரத்தில் மட்டுமே 600 குழந்தைகள் பதிவாகியுள்ளன தாயின் கருப்பையிலிருந்து இந்நோய் அவர்களைப் பாதித்துள்ளது.

10-வயது பையன் ஜிம்மி மூன்று மாதங்களுக்கு முன்னர் நியூயார்க் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டான், தலையை ஒருபுறம் சாய்த்தபடி சக்கர நாற்காலியில் உட்கார்ந்து சுற்றியுள்ளோரை பரிதாபமாக பார்க்கிறான். நீங்கள் பேசுவதை அவன் புரிந்துகொள்கிறான். ஆனால் அவனால் பேச முடியாது என்று மெதுவான குரலில் நர்ஸ் அருகில் இருந்தாரிடம் கூறினாள்.

இந்நோய் பற்றியவிசேஷ ஆய்வில் ஈடுபட்டுள்ள பேராசிரியர் ஆர்யே ரூபின்ஸ்டன் கூறியதாவது:

"பாவம் இந்தகுழந்தைகளை நாங்கள் குணப்படுத்த முடியாது. முடிந்த அளவு அவர்களது வாழ் நாட்களை நீடிக்க நாங்கள் முயற்சிக்கிறோம்" மேலும் அவர் சொன்னார். "திடீரென இந்த நோய் கண்ட குழந்தைகளின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது. இது எங்களுக்கு ஒரு தலைவேதனை."

இந்தநோயால்தாக்குண்ட குழந்தைகள், வயதானவர்களைக் காட்டிலும் விரைவில் மரணம்அடைகின்றனர் நம்பிக்கையற்றுப் போன ஒரு சோகக் கதை இது' என்கிறார் அந்த டாக்டர்.

இதற்கு மருந்து கண்டு பிடிக்கப்படும் வரை(அதற்கு இன்னும் நீண்ட நெடுங்காலம் பிடிக்கக்கூடும்) மேலும் பல குழந்தைகள் செத்துக் கொண்டேதான் இருக்கும்.

# ஓட்டல்களுக்கு தொழில் அந்தஸ்து: மத்திய குழு சிபாரிசு

புதுடெல்லி, ஜூலை26— தொழிற்சாலைகளுக்கு அளிக்கப்பட்டு வரும் "தொழில் அந்தஸ்து" போன்ற தகுதி ஓட்டல்தொழிலுக்கும்அளிக்கப்பட வேண்டும் என்று மத்திய மதிப்பீட்டுக்குழு சிபாரிசு செய்துள்ளது.

மதிப்பீட்டுக்குழு தனது 6வது அறிக்கையை நாடாளுமன்றத்தில் தாக்கல்செய்தது தொழிற்சாலைகளுக்கு அளிக்கப்படும் தகுதிகளும், சலுகைகளும் ஓட்டல்களுக்கும் அளிக்கப்பட்டால் ஓட்டல்களில் விற்கப்படும் உணவுப்பண்டங்களின் விலைகளும் ஒரு அளவுக்கு குறைய வாய்ப்பு ஏற்படும் என்றும் அந்தக்குழு கருத்து தெரிவித்திருக்கிறது.

# பஞ்சாபில் தேர்தல் ஏற்பாடு தீவிரம்

## தலைமை தேர்தல் அதிகாரி தகவல்

**புது டெல்லி, ஜூலை, 26- பஞ்சாப் பிரச்சினையில் ஒப்பந்தம் ஏற்பட்டதைத் தொடர்ந்து அங்கு தேர்தல் நடத்துவதற்கான வாய்ப்பு அதிகரித்துள்ளது என்று தலைமைத் தேர்தல் அதிகாரி திரிவேதி தெரிவித்தார்.**

தலைமை தேர்தல் அதிகாரி திருவேதி நிருபரிடம் கூறியதாவது:—

பஞ்சாப் பிரச்சினையில் உடன்பாடு ஏற்பட்டதால் தேர்தல் நடத்த வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

பஞ்சாப் அரசு தலைமைச் செயலாளருடன் தொடர்பு கொண்டேன். சட்டமன்ற, நாடாளுமன்ற தொகுதிகளில் தேர்தல் நடத்துவது குறித்து ஆலோசனை நடத்தினேன்.

இவ்வாறு திருவேதி கூறினார்.

பஞ்சாபில் ஜனாதிபதி ஆட்சி அக்டோபர் 6ந் தேதி முடிகிறது.

பஞ்சாப் பிரச்சினை ஒப்பந்தத்தை தொடர்ந்து அரியானா, ராஜஸ்தான் ஆகியவற்றின் நலனும் பாதுகாக்கப்படும்என்று பிரதமர் ராஜீவ் கூறினார்.

பஞ்சாப் பிரச்சினையில் தீர்வு கண்டு அகாலிதளத்துடன் பிரதமர் உடன்பாடு கண்டார் அல்லவா?

இதைத் தொடர்ந்து இ காங்கிரஸ் பார்லிமெண்டரி கட்சி சார்பில் பிரதமருக்கு பாராட்டு நடந்தது.

பதிலளித்துப் பேசிய பிரதமர் கூறியதாவது:

சண்டிகார் — பஞ்சாபுக்குக் கொடுக்கப்பட்டு விட்டதால் அரியானாவிற்குப் புதிய தலைநகரம் அமைத்துக்கொள்ள மத்திய அரசு உதவும்.

அரியானாவின் தலைநகரம் சண்டிகாரை விட நன்றாக இருக்கும்.

பஞ்சாப் உடன்பாடு ஏற்பட்ட போதிலும் ராஜஸ்தான், அரியானா ஆகிய மாநிலங்களின் நலன்கள் பாதுகாக்கப்படும்.

### நன்றி

இந்த ஒப்பந்தத்தை தொடர்ந்து மக்களிடையே மகிழ்ச்சி ஏற்பட்டுள்ளது. ஒப்பந்தத்துக்கு உலகெங்கும் மகிழ்ச்சியும் வரவேற்பும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்த ஒப்பந்தம் ஏற்பட்டதற்காக அகாலிதளத்துக்கும், எதிர்க்கட்சிகளின் ஒத்துழைப்புக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு பிரதமர் கூறினார்.

### வாபஸ் பெறும்

மத்திய அரசுடன் உடன்பாடு ஏற்பட்டதைக் தொடர்ந்து அகாலிதளம் நடத்தி வந்த "தர்மயுத்தப் பேரணி" இன்று வாபஸ் பெறப்பட்டது. பஞ்சாப் மக்களும் இதை வரவேற்றுள்ளனர். சீக்கியர்களின் பல்வேறு சங்கங்களும் வரவேற்றுள்ளனர்.

### எதிர்ப்பு குரல்

ஆனால் அகில இந்திய சீக்கிய மாணவர் சம்மேளனம் மட்டும் இந்த உடன்பாட்டை ஏற்றுக்கொள்ளவில்லை என்று கூறி எதிர்ப்புக்குரல் கொடுத்துள்ளது.

ஒப்பந்தத்துக்கு அரியானா அனைத்துக் கட்சி கமிட்டி எதிர்ப்பு தெரிவித்துள்ளது. ஒப்பந்தத்தால் அரியானா நலன் பாதிக்கப்பட்டிருப்பதாக அந்த கமிட்டி கூறியது. அரியானா முதல்வர் பஜன்லாலும் அரியானா எம். பி.களும் அரியானாவைச் சேர்ந்த மத்திய அமைச்சர்கள் பன்சிலால், ராவ் பீரேந்திர சிங் ஆகியோரும் பதவி விலக வேண்டும் என்று அந்த கமிட்டி கேட்டுக் கொண்டது. அரியானா மாநிலத்தைச் சேர்ந்த எதிர்க்கட்சி எம். பி. க்கள் இன்று டெல்லியில் கூடிப் பேச இருக்கிறார்கள்.

### விரைவில் தேர்தல்

ஒப்பந்தம் ஏற்பட்டதால் பஞ்சாபில் விரைவில் தேர்தல் நடைபெறும் என்று காங்கிரஸ் பொதுச் செயலாளர் ராஜேந்திர குமாரி பாஜ்பாய் தெரிவித்தார்.

அகில இந்திய பார்வர்டு பிளாக் பொதுச் செயலாளர் சித்தபாசு, பஞ்சாப் உடன்பாட்டை வரவேற்றுள்ளார்.

### கோஷங்கள்

அமிர்தசரஸ் பொற்கோயில் அருகே ஒப்பந்தத்தை ஆதரித்தும், எதிர்த்தும் இரு கோஷ்டிகள் கோஷமிட்டுக் கொண்டன.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த குருசரண்சிங் ரந்தவா ஒப்பந்தத்தை வரவேற்று அறிக்கை விடுத்துள்ளார்.

### வரவேற்பு

இங்கிலாந்தில் சீக்கியர்கள் உள்ளிட்ட இந்தியர்கள் இந்த ஒப்பந்தத்தை வரவேற்றுள்ளனர்.

இந்தியாவின் ஒற்றுமைக்குப் பாடுபடுமாறு லண்டனிலுள்ள சீக்கியர் சங்கம் கேட்டுக்கொண்டுள்ளது. ஒப்பந்தத்தையும் வரவேற்றிருக்கிறது.

### ராஜஸ்தான்

ஒப்பந்தம்அதிருப்தி தருவதாக ராஜஸ்தான் முதல்வர் அரிதியோ ஜோஷி கூறினார் பஞ்சாப் ஒப்பந்தத்தில் ராஜஸ்தானை சேர்த்திருக்க வேண்டியதில்லை என்று ஜோஷி சட்டசபையில் கூறினார்.

ஒப்பந்தம்சிறந்ததுதான், ஆனால் அதில் நதிநீர் பங்கீடுபற்றி குறிப்பிட்டிருப்பது தான்வருத்தத்தை தருகிறது. ராஜஸ்தான் நலனை பாதிக்கும்எதையும் மத்திய அரசு செய்யாது என்று நம்புவதாக ஜோஷி கூறினார்.

ராஜஸ்தான் நலன் பாதிக்கப்பட்டு உள்ளதால் ஜோஷி ராஜினாமா செய்ய வேண்டும் என்று எதிர்க்கட்சிகள் கேட்டுக்கொண்டுள்ளன.

# நெருக்கடி நிலை: புதிதாக சட்ட திருத்தம் வருமா?

## பிரதமர் ராஜீவ்காந்தி பதில்

புதுடெல்லி, ஜுலை.26- நாட்டில் கலவரம் ஏற்பட்டு அதைத்தொடர்ந்து அமைதி சீர் குறையுமானால் நெருக்கடி நிலையை அமல்படுத்துவதற்கு வசதியாக அரசியல் சாசன சட்டத்தை திருத்தும் உத்தேசம் எதுவும் அரசுக்கு கிடையாது என்று பிரதமர் ராஜீவ் காந்தி கூறினார்.

இந்த மாதம் 7-ம் தேதி புதுடெல்லியில் நடைபெற்ற நிருபர்கள் கூட்டம் ஒன்றில் நெருக்கடி நிலை பற்றி பிரதமர் பேசியது தொடர்பாக மாநிலங்களவையில் எதிர்க்கட்சியினர் சரமாரி கேள்விகளை எழுப்பினார்கள்.

அவற்றிற்குபிரதமர் பதில் அளித்துக் கூறியதாவது;—

நிருபர்கள் கூட்டத்தில் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு நான் பதில்அளித்த விவரங்கள் வீடியோ டேப்புகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவசர நிலை பற்றி நான் அப்போது குறிப்பிட்டேன்.

### எதிர்க்கட்சிகள் வரவேற்பு

1975ம் ஆண்டில் அவசர நிலை அமல் படுத்தியதால் ஏற்பட்ட தவறுகள் நேராமல் இருக்கவேண்டும் என்பதில் அரசு கவனமாக இருக்கிறது அதுபோன்ற சவைறச் செய்து எதிர்கட்சியினர் அரசை அமைக்க விடமாட்டோம்.

1975ஆம் ஆண்டில் நெருக்கடி நிலை அமல்படுத்த வேண்டிய சூழ்நிலையும் அவசியமும் ஏற்பட்டது. அதில் சந்தேகம் இல்லை 1975ஆம் ஆண்டில் நெருக்கடி நிலையை அமல்படுத்தியபோது அதை ஆதரித்து சில முக்கிய தலைவர்கள் கடிதங்கள் எழுதியுள்ளனர்

ராஷ்டிரீயஸ்வயம் சேவக் சங்கம் (ஆர்.எஸ்.எஸ்) கூட அவசர நிலையை ஆதரித்து எங்களுக்கு கடிதம் எழுதியது

ஜனதாதலைவர்பிஜூபட்நாயக். முன்னாள பிரதமர் சரண் சிங் முதலிய தலைவர்களும் நெருக்கடி நிலையை ஆதரித்து கருத்துத் தெரிவித்துள்ளனர்.

### சட்ட திருத்தம் இல்லை

உள்நாட்டு கலவரங்கள் ஏற்பட்டு அமைதிக்கு சீர் குலைவு நடக்கும்போது நெருக்கடி நிலையை அமல் படுத்துவதற்கு வசதியாக அரசியல் சாசன சட்டத்தைத் திருத்தும் உத்தேசம் எதுவும் அரசுக்கு இல்லை என்பதை உறுதியுடன் கூற விரும்புகிறேன்.

அரசியல் சாசனத்தின் 352-வது ஷரத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதை நான் இங்கேயும் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். இதன்படி போர், வெளிநாட்டு ஆக்கிரமிப்பு அச்சுறுத்தல், ஆயுதகலகம் ஆகியவை ஏற்படும்போது நெருக்கடி நிலை அமல்செய்வதற்கு ஆதரவாக முடிவு எடுக்க பிரதமருக்கும்அரசுக்கும் சில அதிகாரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

### பதவிக்கு தகுதியற்றவர்

இப்படிப்பட்ட நிலைமையில் நெருக்கடி நிலைமை அமல்படுத்த தவறும் பிரதமர் யாராக இருந்தாலும் அவர் அந்தப் பதவிக்கு தகுதியற்றவர் ஆவார்.



### மாற்றம் இல்லை

ராணுவத்தை யாராவது கலகம் செய்யும்படி கூறினால் அதற்கு நாம் என்ன செய்வது? இதை எதிர்க்கட்சியினர் கருத்தில் கொள்ளவேண்டும்.

எந்தப் பிரதமராக இருந்தாலும் அவர் எந்தக் கட்சியைச் சேர்ந்தவராக இருந்தாலும் அவசியம் ஏற்பட்டால் நெருக்கடி நிலைமையை அமல்படுத்தியேஆக வேண்டும் என்ற நிலைமையில் மாற்றம் ஏதும்இல்லை,

இவ்வாறு மாநிலங்களைவயில் பிரதமர் ராஜீவ் காந்தி கூறினார்.

# ஆறு மாதத்தில் 4 லட்சம் பேருக்கு பாஸ்போர்ட்

புதுடெல்லி, ஜூலை 26- நாட்டின் பல் வறு பாஸ்போர்ட் அலுவலங்களிலிருந்து கடந்த 6 மாத காலத்தில் 4 லட்சம் பேருக்கு பாஸ்போர்ட்டுகள் வழங்கப்பட்டுள்ளன.

மக்களவையில் ஒரு உறுப்பினர் கேள்விக்கு மத்திய வெளியுறவு இணை அமைச்சர் குர்ஷித் ஆலம்கான் பதிலளித்து பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

நாட்டின் பல்வேறு பாஸ்போர்ட் அலுவலகங்களிலிருந்து 1985 ஜனவரிமுதல் ஜூன் மாதம் வரை 4 லட்சத்து 25 ஆயிரத்து 563பேர்களுக்கு பாஸ்போர்ட்டுகள் வழங்கப்பட்டுள்ளன.

பாஸ்போர்ட்டு விண்ணப்பிப்போர் வர்த்தகம், கல்வி, வேலை மற்றும் சுற்றுலா ஆகிய காரணங்களுக்காக அயல்நாடு செல்ல பாஸ்போர்ட் பெற்றுள்ளனர்,

இவ்வாறு அவர்கூறினார்.

# முதல்வர் முன்னிலையில் பம்மல் நல்லதம்பி கழகத்தில் இணைந்தார்

சென்னை, ஜூலை, 26— முன்னாள் தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர் பம்மல் நல்லதம்பி முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தார். இநநிகழ்ச்சி ராமாவரம் தோட்டத்தில் நடைபெற்றது அச்சமயம்அமைச்சர்கள் டாக்டர் நாவலர் ப.உ.ச. ஆகியோர் உடனிருந்தனர்.

# புரட்சித் தலைவரின் சாதனைகளை மக்களுக்கு சொல்வீர்

## கழக மாணவர்களுக்கு சுலோசனா சம்பத் வேண்டுகோள்



உடுமலை, ஜூலை 26- புரட்சித்தலைவர் அரசின் சாதனைகளை மக்களுக்கு எடுத்துச்சொல்லும் பணியினை கழக மாணவர்கள் ஆற்ற வேண்டுமென்று சுலோசனாசம்பத் வேண்டுகோள்விடுத்தார்.

உடுமலையில் நடைபெற்ற கழக மாணவர் பயிற்சி முகாமில் பங்கேற்று தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகத் தலைவர் சுலோசனாசம்பத் பேசியதாவது:—

நமது இயக்கத்திலே அந்தக் காலத்திலேயே அறிஞர் பெருமக்களுக்கு, படித்த பண்டிதர்களுக்கு பஞ்சமேயில்லை. சிங்கார வேலர் கஞ்சை கைவல்யனார், பொன்னம்பலனார், டி.ஏ.வி.நாதன். பன்னீர் செல்வம், பேரறிஞர் அண்ணா, நாவலர்போன்ற படையே நமது இயக்கத்தில் இருந்தது.

அதனால்தான் இருண்டு கிடந்த தமிழ் சமுதாயத்தில் நம்மால் ஒளியேற்ற முடிந்தது. இன்றைய முன்னேற்றம் எல்லாம் ஏதோ மந்திர வார்த்தைகளால் ஏற்பட்டது என்று யாரும் தயவு செய்து எண்ணத் தேவையில்லை. நமது இயக்கம் பல அறிஞர்களைப் பெற்று— அவர் தம் சிந்தனை ஆற்றல், எழுத்து, பேச்சு, கூட்டம், மாநாடு என்று 50 ஆண்டு காலம் நடத்திய அறிவுப் புரட்சியே, இன்றைய அனைத்து மாற்றங்களுக்கும், முன்னேற்றங்களுக்கும் காரணமாகும்.

### மக்கள் மனதில்

தமிழகத்தில் எத்தனையோ சீமான்கள், பூமான்கள், மேதைகள் இருந்த நிலையிலும் மக்கள் தந்தைபெரியார் அவர்களை தலைவராக ஏற்றது ஏன்? அண்ணா அவர்களை ஆட்சி பீடத்தில் ஏற்றியது ஏன்? இன்று புரட்சித் தலைவர் அவர்களைமூன்றாவது முறையாக முதல் அமைச்சராக்கியது ஏன்? நிரந்தரத் தலைவராக்கியது ஏன்?

7 ஆண்டுகாலம் ஆட்சியை நடத்தி மீண்டும்ஆட்சியைப் பிடிக்க முயலும் அவர்கள் சொல்லுவது போல் கவர்ச்சியா? பணமா? இல்லை. ஏழை எளிய மக்களின் நம்பிக்கையைப் பெற்ற திராவிட இயக்கத்தின் பிரதிநிதிகளாக— நாம் நம்மை முன் நிறுத்தியுள்ளோம். அதன் அடிப்படையிலேயே இன்று நம் மக்கள் நாம் தான் அவர்களின் அரணாக இருக்க முடியும், அவர்களைப்பற்றி நினைக்க முடியும், அவர்களை முன்னேற்ற முடியும் என்று நம்புகிறார்கள்.

### நல்ல தொடக்கம்

ஆகவே இன்று மக்கள் நம் பக்கம்தான் என்றாலும், இந்த மக்களை இறுதி வரையில் நம்மோடு வைத்து கொள்ள மக்கள் பிரச்சினைகளில் நமக்குஅவர்களோடு நெருக்கமாகத் தொடர்பிருக்க வேண்டும். நம் மேடைகளில் மக்கள் பிரச்சினைகளையும், அவற்றில் நம் அரசு புரிந்து வரும் சாதனைகளையும் புரிகிற வகையில் விளக்கவேண்டும்.

சாதனைகள் ஒன்றா? இரண்டா? ஏராளம். குறிப்பாக ஏழைஎளிய மக்களுக்கு அவர்களின் நல்வாழ்விற்காகவும் முன்னேற்றத்திற்காகவும் எத்தனையோ நல்ல பல திட்டங்கள்— திட்டங்கள் என்பது ஏதோ ஏட்டளவில் நின்று விடுவதல்ல அந்த திட்டங்கள் நல்ல முறையில் தீட்டப்பட்டு அதனால் ஏற்படுகின்ற பலன்கள் அதற்குரிய மக்களுக்கு போய்ச்சேர வேண்டுமென்பதிலே மிகவும் கவனத்துடனும். அக்கறையுடனும் இருந்துவருகிறார் புரட்சித் தலைவர்

இதனை மேடைகளில் எடுத்துச் சொல்ல வேண்டும்.

அதற்கு இந்த பயிற்சி முகாம் நல்ல தொடக்கமாகவும்நம்பிக்கைதரும்திருப்பமாகவும் அமைதல் அவசியம்

இவ்வாறு சுலோசனா சம்பத் பேசினார்.

# சந்திரனைப் பற்றிய மற்றொரு ரகசியம்

மாஸ்கோ, ஜூலை 26— சோவியத் விஞ்ஞானிகள் சந்திரமண்டல மண்ணில் ஹைட்ரஜன் வாயுவைக் கண்டுபிடித்துள்ளனர்.

சூரிய மண்டலத்திலுள்ள எல்லா கிரகங்களின், குறிப்பாக பூமி மற்றும் சந்திரனின், புவி—ரசாயன அமைப்பு ஒன்று போல் உள்ளது, எனவே, சந்திரனில் வாயுஇல்லாதது என்பது, நெடுங்காலமாக விஞ்ஞானிகளுக்கு ஒரு புதிராக இருந்தது. பூமியின் மேற்பரப்பு எங்கும் ஹைட்ரஜன் உள்ளது! ஆனால் சந்திரனில் அது கண்டு பிடிக்கப்படவில்லை.

சந்திர மண்டல மண்ணின் பளபளப்பான பாறைத துகள்களைச் சோவியத் விஞ்ஞானிகள் ஆராய்ந்த பொழுது, இந்தப் புதிருக்கு விடை கிடைத்தது. அந்தப் பாறைத் துகள்களை அவர்கள் உருக்கிய போது, ஹைட்ரஜன் வாயு கிடைத்தது.





Edited and Published by K. RAVINDRAN on behalf of Thagamani Publications and Printed by All India Anna D.M.K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road MADRAS-600029.

# இலங்கையில் முழு அடைப்பு வெற்றி

கொழும்பு, ஜூலை 26— இலங்கையில் கடந்த 2 ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்ட இனக்கலவரத்தில் உயிரிழந்த தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் தீவிரவாதிகள் நடத்திய முழு அடைப்பு வெற்றி பெற்றது.

1983ம் ஆண்டு ஜூலை மாதம் நடந்த இனக் கலவரத்தின் இரண்டாவது நினைவு ஆண்டைக் குறிக்கும் வகையில் யாழ்ப்பாணத்தில் நேற்று அர்த்தால் நடந்தது. தமிழ் தீவிரவாதிகள் இந்த அர்த்தாலுக்கு அழைப்பு விடுத்திருந்தனர்.

யாழ்ப்பாண நகரில் பெரும்பாலான கடைகள், பள்ளிகள் மூடியிருந்தன.

## ராணுவம் புகுந்தது

இதற்கிடையில் வவுனியா நகரில் ஏற்பட்ட சிறிய சலசலப்பை ஒட்டி அந்நகருக்குள் ராணுவம் புகுந்ததாக தகவல்கள் தெரிவிக்கின்றன.

இலங்கை துணைமந்திரி ஆல்விஸ் நிருபர்களிடம் பேசுகையில் திம்புவில் நடைபெறும் அடுத்த கட்ட பேச்சு வார்த்தையில் இலங்கை அரசு கலந்து கொள்ளுமென்றும் முன்பு பங்கேற்ற பிரதிநிதிகளே அடுத்த கூட்டத்திலும் பங்கேற்பார்கள் என்றும் கூறினார்.

இரண்டாவது கட்ட பேச்சுவார்த்தை அடுத்த மாதம் 12ந்தேதி திம்புவில் நடைபெறுகிறது.

## கல்பாக்கம் அணுமின் நிலையத்தில் கோளாறு

சென்னை, ஜூலை, 26— கல்பாக்கத்தில் உள்ள அணுமின் நிலையத்தில் கோளாறு ஏற்பட்டதைத் தொடர்ந்து மின் உற்பத்தி தற்காலிகமாக நிறுத்தப்பட்டுள்ளது.

டிரான்ஸ்பார்மர் யந்திரத்தில் எண்ணெய் ஒழுக்கு ஏற்பட்டதால் இந்தத் தடங்கல் ஏற்பட்டதாக மின்நிலைய அதிகாரி ஒருவர் கூறினார்.

பொதுவாக அணுமின் நிலையத்தின் பராமரிப்பு வேலைகளும் இப்போது நடக்கவிருக்கின்றன என்றும் இந்தவேலைகள் சரிவர முடிந்தவுடன் மீண்டும் மின் உற்பத்தி தொடங்கும் என்றும் அவர் தெரிவித்தார்.

அநேகமாக வரும் ஆகஸ்ட் மாதம் முதல் தேதியில் அது தன் உற்பத்தியைத் குமென எதிர்பார்க்கப்படுகிறது.

## சிறுவன் கண்ணைக் குருடாக்கிய பாதகர்கள்

திருவனந்தபுரம், ஜூலை 26— கேரள மாநிலம் கோட்டயம் மாவட்டத்திலுள்ள ஒரு ரப்பர் தோட்டத்தில் வேலை பார்க்கும் சிறுவன் ஒருவனது கண்ணில் மூன்று பாதகர்கள் ஆசிட்டை ஊற்றி குருடாக்கியுள்ளனர்;

இது தொடர்பாக மூன்று போலீஸ் அதிகாரிகள் சஸ்பெண்ட் செய்யப்பட்டதாகவும், ஒருவர் கைது செய்யப்பட்டுள்ளதாகவும் சட்டசபையில் அமைச்சர் வயலார்ரவி கூறினார்.

கண் இழந்த சிறுவன் கண் பார்வையை மீண்டும் பெற அவனுக்கு அரசு செலவில் மருத்துவ சிகிச்சை அளிப்பது குறித்து அரசு பரிசீலிப்பதாகவும் அமைச்சர் கூறினார்.

## லண்டனில் கண்காட்சி

லண்டன், ஜூலை, 26 லண்டன் மிருககாட்சி சாலையில் ஒரு மனிதனை கூண்டில் அடைத்து பொது மக்கள் பார்வைக்கு வைக்கிறார்கள்.

மனிதன் "ஒரு அறிவு உள்ள மிருகம்" என்பதை உணர்த்துவதற்காக இந்த புதுமையை செய்யப்போகிறார்களாம்.

கெர் கடந்த பல ஆண்டுகளாக தனியாகவே வசித்து வந்தார் என்று தெரிகிறது.

# விமான விபத்து: 79 பேர் மரணம்

பொகோதா, ஜூலை 26 விமானம் வெடித்துச்சிதறி 79 பேர் இறந்தனர்.

இரண்டு மாதங்களுக்கு முன் ஏர் இந்தியா விமானம் நாசவேலை காரணமாக உடைந்து 329 பேர் கொல்லப்பட்டனர் அல்லவா?

தற்போது கொலம்பியா விமானம் ஒன்று நொறுங்கி 79 பேர் இறந்துள்ளனர்.

அந்த விமானம் அமேசான் வனப்பகுதியில் செல்லும்போது மூடுபனி காரணமாக மலையில் மோதி நொறுங்கி விட்டதாகத் தெரிகிறது.

விமானத்தில் இருந்த 79 பேரும் இறந்தனர்.

கொலம்பியாவின் எல்லையையொட்டிய பிரேசுல் பெருஎல்லைப்பகுதியில் விமானத்தின் பகுதிகள் உடைந்து கிடந்தன.

## பெண்கள் விடுதியில் அமைச்சர் சோதனை

சென்னை, ஜூலை 26— ஆதிதிராவிடர் நலத்துறை பெண்கள் விடுதிகளில் அமைச்சர் அருணாசலம் திடீரென்று சென்று சோதனையிட்டார்.

உடுமலைப்பேட்டையில் அரசு ஆதிதிராவிடர் நலத்துறை பெண்கள் விடுதியை ஆதிதிராவிடர் நலத்துறை அமைச்சர் அருணாசலம் திடீரென்று சோதனையிட்டார். அவ்விடுதியில் மாணவிகள் தண்ணீர் இல்லாமல் அவதிப்படுவதை அறிந்து உடனே கிணற்றை ஆழப்படுத்தும்படியும் தண்ணீரை மேல் ஏற்றும் மோட்டாரை உடனே பழுது பார்க்கும்படியும் மாவட்ட ஆதிதிராவிடர் நலத்துறை அதிகாரிக்கு உத்தரவிட்டார்.

ஆதிதிராவிடர் மாணவர் விடுதியையும் திடீரென்று சோதனையிட்டார். அச்சோதனையிலும் விடுதி சுத்தமில்லாமல் இருப்பதை அவ்விடுதி காப்பாளருக்கு சுட்டிக்காட்டி, இனி இது போல் இருக்கக் கூடாது என்று எச்சரிக்கை விடுத்தார்.

மாணவர்கள் தங்கிப்படிக்க இடவசதியின்மையை நேரில் கண்டறிந்து, இட வசதிக்கு தக்க நடவடிக்கை எடுக்கும்படி உத்தரவிட்டார்.

## கள்ளக் காதல் செய்வதில் கணவன் மனைவி போட்டா போட்டி

மதுரை, ஜூலை 26— கள்ளக்காதல் செய்வதில் கணவன்மனைவியிடையே யார் கெட்டிக்காரர் என்ற போட்டி மதுரையில் நடந்துள்ளது.

கணவன் தன்னுடைய அண்ணியுடன் தொடர்பு கொண்டான் என்பதற்காக மனைவி தன் அத்தை மகனுடன் காதல் கொண்டாள். கணவன் மனைவி இருவரும் போட்டிபோட்டு காதல் கொள்கின்றனர். இந்த ருசிகர சம்பவம் பற்றிய விவரமாவது:-

மதுரை அவனியாபுரம் அருகே உள்ள சிந்தாமணி என்ற ஊரை சார்ந்தவர் முருகேசன், இவருக்கும் தனலெட்சுமி என்பவளுக்கும் 3 மாதத்திற்கு முன்பு திருமணம் நடந்தது.

முருகேசனின் சகோதரன் பாண்டி உடல்நலம் இன்றி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சைபெற்று வருகிறாராம். பாண்டி மருத்துவமனையில் இருக்கும் பொழுது முருகேசனுக்கும், பாண்டி மனைவிக்கும் காதல் ஏற்பட்டு ஒருவரோடுஒருவர் தொடர்பு வைத்து இருந்தார்களாம்.

இதைக் கேள்வியுற்ற முருகேசனின் மனைவி தனலட்சுமி தனது கணவனை கண்டித்தாராம். இவள் கண்டித்ததை பொருட்படுத்தாமல் முருகேசன் தொடர்ந்து தனது அண்ணியிடம் தொடர்பு வைத்துள்ளதாக கூறப்படுகிறது. இதைகண்டு வருத்தம் அடைந்த தனலட்சுமி தானும் ஒரு முடிவுக்கு வந்து தனது அத்தை மகனிடம் காதல் கொண்டு காதலித்து வந்தாராம்.

இதை முருகேசன் கண்டித்தாராம் அதற்கு 'நீ முதலில் உன் அண்ணியுடன் உள்ள தொடர்பை நிறுத்து' என்று கூறினாராம். இருவருக்கும் வாக்குவாதம் ஏற்படவே முருகேசன் தன் மனைவி தனலட்சுமியை கழுத்தை பிடித்து நெரித்திருக்கிறார், தனலட்சுமி மயக்கம் அடைந்து கீழே விழவும், தனலட்சுமி இறந்து விட்டார் என்று முருகேசன் எண்ணி நேராக கோர்ட்டுக்கு சென்று சரண் அடைந்து விட்டாராம்.

சிறிது நேரத்தில் கீழே விழுந்த தனலட்சுமி மயக்கம் தெளிந்து எழுந்து போலீசில் புகார் செய்தாராம்.

இதுபற்றி அவனியாபுரம் போலீசார் விசாரணை செய்து வருகின்றனர்.

## அமைச்சர் நிகழ்ச்சிகள்

**டாக்டர் நாவலர்**

ஜூலை 29 மதுரை திருநெல்வேலி குற்றாலம் 30 குற்றாலம், மதுரை.

**ப. உ. ச.**

ஜூலை, 27. திருவண்ணாமலை, அடையூர் 28- திருவண்ணாமலை, தென்னாற்காடு மாவட்டம் 29- விருதாசலம் திருவண்ணாமலை, 30— திருவண்ணாமலை.

**வீராசாமி**

ஜூலை 27, 28, ஒரத்தநாடு 30 நன்னிலம் திருமருகல்

**அருணாசலம்**

ஜூலை 28 —மதுரை

## நாட் குறிப்பு

**மதுரை**

மதுரை மாவட்டம் 47-வது வட்டம் சார்பில் கழகப் பொதுக்கூட்டம் வரும் 28-ந் தேதி மாலை சிங்காரபுரம் அண்ணா திடலில் அலெக்சாண்டர் தலைமையில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் அமைச்சர்கள் அருணாசலம், நல்லுசாமி பழக்கடை எஸ். பாண்டியன், மற்றும் பலர் பேசுகின்றனர்.

## மதுரையில் கண்சிகிச்சை முகாம்

மதுரை, ஜூலை 26— மதுரையில் கோட்ட அளவிலான அரசு இலவச கண் சிகிச்சை முகாம் மதுரை அகர்வால் பவன் மண்டபத்தில் இம்மாதம் 30-ந் தேதி முதல் அடுத்த மாதம் 5-ந் தேதி வரை நடைபெற உள்ளது.

மதுரை கிழக்கு, மதுரை மேற்கு, திருப்பரங்குன்றம், மேலூர், நத்தம், கொட்டாம்பட்டி ஆகிய ஊராட்சி ஒன்றிய பகுதிகளில் மதுரை இராஜாஜி அரசினர் மருத்துவமனையை சேர்ந்த கண் மருத்துவ நிபுணர்களால் பரிசோதனை நடத்தப்படும்.

28-7-85, 29-7-85 இரண்டு தினங்கள் மதுரை கோட்ட ஊராட்சி ஒன்றியங்களில் முன்பரிசோதனை முகாம் நடைபெறும்.

30-7-85 அன்று கண் நோயாளிகள் மதுரை அகர்வால் பவனில் அனுமதிக்கப்படுவர் 31-7-85 அன்று கண் சிகிச்சை 7-8-85 முகாம் முடிவு.

கண் சிகிச்சை பெறும் நோயாளிகளுக்கு மருத்துவ வசதி, தங்குமிடம், உணவு, கண்ணாடி முதலயவை இலவசமாக வழங்கப்படும். இந்த நல்ல சந்தர்ப்பத்தை பயன்படுத்தி மதுரை மாவட்ட மக்கள் பயன் பெறும்படி மதுரைமாவட்ட ஆட்சித் தலைவர் இரா. வரதராஜுலு கேட்டுக் கொண்டுள்ளார்.